7th December 1961]

THE HON. SRI C. SUBRAMANIAM : கூடியவரையிலே, எல்லோருக்கும் கொடுக்கப்பட்டிருக்கிறது. யாராவது கொடுக்கவில்லை என்று கூறி இருந்தால், அது மாதிரிப்பட்ட விஷயங்கள் உண்மையாக இருந்தால் உடனடியாகப் பரிசீலனை செய்யப்பட்டு, தீர்க்கப்பட்டு வருகிறது. அதைப்போல் வந்த விண்ணப்பங்கள் அவ்வப்போது கவனிக்கப்பட்டு, அதற்குத் தகுந்த உத்திரவுகள் பிறப்பிக்கப்பட்டு இருக்கிறது.

SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, பல்வேறு இலாகாக்களிலே, அட்டெண்டர்களாகப் பணியாற்றும், அதாவது ஏழெட்டு ஆண்டுகள் தொடர்ந்து பணியாற்றியும் அவர்களை நிரந்தரமாக்காமல், வொர்க் சார்ஜ்ட் என்று அழைக்கப்படும் முறையிலே அன்றாட ஊதியம் கொடுக்கப்படும் முறையிலே பல ஆண்டுகள் இருந்து வருவது கனம் அமைச்சர் அவர்களுக்குத் தெரியுமா ? அப்படிப்பட்டவர்களுடைய விண்ணப்பங்கள் கவனிக்கப்பட்டு, அவர்களை நிரந்தரம் செய்வதற்கு உடனடியாக நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அட்டெண்டர்களாகவும், பியூன்களாகவும் வேலை செய்பவர்களை ஒர்க் சார்ஜ்ட் காடிகரியில் சேர்ப்பதில்லை. மாதச் சம்பளத்தில்தான் எடுக்கப்படுகிறார்கள். இந்த காடிகரிக்கு நாள் சம்பளமோ வாரச் சம்பளமோ கிடையாது.

*Doctors for rural areas*

*2154.*Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கிராமப் புறங்களில் டாக்டர்கள் கட்டாய சேவை செய்யவேண்டுமென்று மத்திய சர்க்கார் கொண்டுவரும் சட்டத்தைக் குறித்து மாநில சர்க்காரின் ஆலோசனையைக் கேட்டார்களா ?

(இ) அப்படியானால், அதன் விவரமென்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) No.

(இ) Does not arise.

SRI S. M. ANNAMALAI : ஸார், இந்தியத் துணைக் கண்டத்தின் பிரதம மந்திரியாக விளங்கும் ஜவஹர்லால் நேரு, மத்திய சர்க்காரிலே கிராமப்புறங்களிலே டாக்டர்கள் கட்டாயமாக சேவை செய்யவேண்டுமென்று சட்டம் கொண்டு வரப்போகிறோம் என்று சொன்னார்களே, அதைக் குறித்து இந்தச் சர்க்கார் என்ன முடிவெடுத்திருக்கிறார்கள் ? அதேபோல், இந்தச் சர்க்கார் இந்த மாநிலத்தில் அரைகுறை வைத்திய படிப்பு முறையைப் புகுத்த வேண்டுமென்று இருந்தார்களே, அதற்குக்கூட மத்திய சர்க்கார் அல்லவா . . . . . .

DEPUTY SPEAKER : The hon. Member should put a separate question.